84

# திருநெல்வேலை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி - ஆனி - 2019 - ஜூன்

சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அறநிலைக் கல்வி நிறுவனங்கள் சார்பில்
நடைபெற்ற யோகா தின நிகழ்ச்சி

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி - ஆனி - 2019 - ஜூன் இதழ் - 84

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




காம்பனைய தோள் அழகி கயிலாயத் தான்துணைவி

கயற்கண்ணி கார்மேகக் குழலி வையம்

காப்பவன்தன் பின்பிறந்தாள் கழனி வாயில்

கண்டுவந்த காரிகையாள் கழுத்தைச் சுற்றிப்

பாம்பாட வீற்றிருப்பான் உடல்பாதி இடங் கொண்ட

பங்கயத்தாள் கொண்டமயில் பக்த ரெல்லாம்

பார்க்கமகிழ் பரமேட்டி நூபு ரங்கள்

பண்பாட வருஞ்செல்வி பவள வாயாள்

ஆம்பல்போல் இதழுடையாள் அரனவன்தாள் மறவாதாள்

ஆரணங்கள் இவள்பெருமை அறையக் கேட்பாள்

அம்பலத்தான் நடங்காணும் அரிவை யாகி

அவன் ஆடல் கண்டுவக்கும் அழகு மங்கை

தூம்புடைய மதுவாவித் தோகையிவள் நமக்கெல்லாம்

துணையென்பார் நிலையுயர நம்மை வாழ்த்தித்

தொலையாத பேரின்பம் நல்கு வாளைத்

துணையென்று நாம்கொண்டால் துன்பம் தீரும்!

*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

நம் நாட்டில் பெரும்பாலானோர் கடைப்பிடித்து வருகின்ற சமயங்கள் யாவும் முதன்மையாக எல்லா உயிர்களும் ஒன்றே, பிரிவினைகள் பேதங்கள் கிடையாது என்றே உபதேசிக்கின்றன. நம்முடைய திருமடம் கடைப்பிடிக்கின்ற அத்வைத தத்துவம் வேத, வேதாந்தக் கருத்துக்களை உட்கொண்டது.

வேதங்களிலே நால்வகை வர்ணாசிரமங்கள் சொல்லப்பட்டதாகத் தெரியவில்லை. பின் வந்த குருமார்கள், புராண இதிகாசங்கள் பரப்பிய கொள்கைகள் அவை. திருவள்ளுவரும் ஜாதி மத பேதங்கள் கூறவில்லை. எல்லாவற்றிலும் தொழில் தர்மங்கள் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன. பிற்காலத்தில் செய்கின்ற தொழிலை வைத்து ஜாதி, இனம் பிரிக்கப்பட்டு இன்றைய அவல நிலைக்கு வந்துள்ளன.

பிறக்கின்ற உயிர்கள் நான்கு விதம், வர்ணாஸ்ரமம் ஏழுவகை பிறப்புக்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன.

நால்வகை பிறப்பு :

1. கர்ப்பம் – மனிதம் / கால்நடை
2. முட்டை வழி – பறவைகள் / மீன் முதலியன
3. வியர்வை வழி – கொசு / பேன்
4. விதை வழி – தாவர வகைகள் மரம் செடி, கொடி

ஏழுவகை உயிர்கள் :

மனிதன் – 9 (லெட்சம்) : தேவர் – 14, நடப்பன – 10, ஊர்வன – 11, நீர் வாழ்வன (நீந்துவன) – 10, பறப்பன – 10, தாவரம் – 20.

மொத்தம் 87 லெட்சம் விதமான உயிரினங்கள் பிறக்கின்றன (அவற்றில் உள் பிரிவும் உண்டு)

உலகிலே எல்லா உயிர்களும் மரம், செடி, கொடி உட்படச் சமமானவையே. பரம்பொருளால் படைக்கப்பட்டவை, இயக்கப்படுபவை; எனவே உயிர்கட்கு இடையே பேதங்கள் கிடையவே கிடையாது. மனித இனம் ஆறாவது அறிவாகிய பகுத்தறிவைக் கொண்ட உயர்ந்த இனம். அதனாலே தங்களுடைய வாழ்க்கையை

நான்கு அடிப்படைப் பிரிவுகளாக வகுத்துக் கொண்டார்கள்.

1. பிரம்மசரியம் (கல்விக் காலம்)
2. கிரகஸ்தம் (இல்லறக் காலம்)
3. வானப்பிரஸ்தம் (தொண்டுக் காலம்)
4. சந்தியாசம் (துறவு)

முற்காலங்களிலே கல்வி என்பது எண்ணும் எழுத்தும் மட்டுமல்லாமல் கலைகள், வித்தைகள் அனைத்தும் சேர்ந்தவையாக இருந்தது. கற்றல், கேட்டல், சங்கீதம், நடனம், ஓவியம் போன்ற கலைகளைக் கற்பது. போர் வித்தைகள், குதிரை ஏற்றம், யானை ஏற்றம் போன்ற வித்தைகள் அனைத்தும் குருகுல வாசம் அமைப்பிலேயே கற்றுக்கொள்ளப்பட்டன. அதுவும் அதிகபட்சம் 18 வயதிற்குள்ளாகக் கற்றுத் தேற வேண்டும். அப்படிப்பட்ட குருகுல வாசத்தின் மூலமாகக் கற்றவை என்றும் மனதில் நின்று துணைபுரியும்.

திருவள்ளுவரின் வாக்குப்படி கற்றவை அனைத்தும் தெளிவாக மனதில் பதிந்து அவை கூறும் நெறிமுறைகளின் வழியாக நம்முடைய பின்னாள் வாழ்க்கையை அறவழியிலே சீரும் சிறப்போடும் அமைத்துக் கொள்ள வேண்டும். இதனைத் தான்

*கற்க கசடறக் கற்பவை கற்றபின்*
*நிற்க அதற்குத் தக.*

என்று வள்ளுவர் கூறுவார்.

இருபதாம் நூற்றாண்டு தொடக்க காலம் வரை குருகுல வாசக் கல்வி முறை கடைப்பிடிக்கப்பட்டது. பின்னர் ஏட்டுப் பள்ளிக் கூடம், திண்ணைப் பள்ளிக் கூடம் என்று அழைக்கப்பட்ட சிறு சிறு பள்ளிகள் தோன்றிக் குறிப்பிட்ட கால வரையறைக்குள் காலை முதல் மதியம் வரை நடத்தப்பட்டன. இருபதாம் நூற்றாண்டு மையக் காலம் தொடங்கி 1960 வரை இந்தக் கல்வி முறையே கடைப்பிடிக்கப்பட்டது.

குழந்தைகளுக்கு 5 வயது நிரம்பியவுடன் பள்ளியில் சேர்த்தல் என்பதை ஒரு சிறு விஷேசமாகவே கொண்டாடுவார்கள். இன்றும் தமிழ்நாட்டில் சில இடங்களிலும் குறிப்பாகச் செட்டிநாட்டில் கேரளாவில் எல்லா மக்களும் கல்வித் தொடக்க விழாவாகக் கடைப்பிடிக்கிறார்கள். குறிப்பாக சரஸ்வதி பூஜை, விஜய தசமி ஆகிய தினங்களிலே கோவில்களுக்குக் குழந்தைகளை அழைத்துக் கொண்டு சென்று

அங்கே அமர்ந்துள்ள திறமையும் அனுபவமும் மிக்க குரு ஒருவர் கையாலே குழந்தையின் விரலைப் பிடித்து அரிசியில் எழுத வைப்பார்கள். அப்படி முதன் முதலில் கல்வியைத் தொடங்கி வைக்கின்ற பெரியவர் எழுத்தச்சன் என்று அழைக்கப்படுவார்.

மேற்சொன்ன பள்ளிகளிலே மிக அவசியத் தேவையான தாய் மொழியும் கணக்கும் மிகச் சிறப்பாகக் கற்பிக்கப்பட்டன.

தமிழகத்தில் ஏட்டுப் பள்ளிக் கூடம் / திண்ணைப்பள்ளிக் கூடம் தமிழில் அறநூல்களை முழுமையாக மனதில் ஆழமாகப் பதியும் வண்ணம் கற்றுத் தருவார்கள். கணிதத்திலே கூட்டல், பெருக்கல், கழித்தல், வகுத்தல், பின்னம் ஆகிய எண் கணக்கு (Numerical Mathematics) அனைத்தும் கற்பிக்கட்டன. இந்தக் கல்வியை 10 வயதிற்குள் முடித்து 11வது வயதிலே பர்மா மலையாவிற்குத் தொழில் செய்யச் சென்றவர்கள் மிகச் சிறப்பாக வளர்ந்தார்கள். அவர்களுடைய கணிதத் திறமை வெகுவாகப் பாராட்டப்பட்டன. அறநூல்களைக் கற்றதனால் தவறு செய்வது நடைபெற்றாலும் மிக மிகக் குறைவாக இருந்தன.

அதனாலே பிரம்மச்சரியம் என்று சொல்லப்படுகின்ற கல்விக் காலம் செம்மையாக அமைய வேண்டும். அப்படி அமைந்தால் மட்டுமே மீதம் உள்ள ஆயுட் காலம் அமைதியாகவும் நிம்மதியாகவும் பயன் உள்ளதாகவும் அமையும்.

இந்த மாதிரி, பிள்ளைகளுக்கு நெறிமுறைகளைக் கற்றுக் கொடுத்து நல்ல மனிதர்களாக வளர்த்த கல்வி முறை ஆங்கிலேயர் காலத்தில் மெக்காலே கொண்டு வந்த ஆங்கில முறைக் கல்வி ஆங்கிலேயர்க்குத் தேவையான எழுத்தர்களையும், அலுவலர்களையும், பணி ஆட்களையும் உருவாக்கவே பயன்பட்டது.

அதன் தொடர்ச்சியாக வயது வேறுபாடின்றிப் பாலியல் குற்றங்களும், அனாவசியத் தேவைகளுக்காக மாணவர்களே திருடுவது, சங்கிலி பறிப்பது போன்ற காரியங்கள் இப்பொழுது மிக சகஜமாகி வருகின்றன.

இதனை மாற்ற வேண்டும் என்றால் நாம் முற்கால அறநெறி நூல் கல்வியைத் திரும்பத் தொடங்கி நம்முடைய மாணவர்களை நல்ல கல்வி கற்றவர்களாக வளர்க்க வேண்டும்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

**தாண்டவராயக் கோனார் கூற்று :**

இவர் இடையர் ஆதலின் ஆயர்களை முன்னிலைப்படுத்திக் கீழ்க் காணும் கண்ணிகளைப் பாடுகின்றார். தாண்டவராயக் கோனார் என்பவர் பாடுவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

*ஆயிரத்துஎட்டு வட்டமும் கண்டேன்*
*அந்த வட்டத்(து) உள்ளே நின்றதும் கண்டேன்*
*மாஇரு ஞாலத்து நூற்றெட்டும் பார்த்தேன்*
*மந்த மனத்(து) உறும் சந்தேகம் தீர்ந்தேன்* 20

**விளக்கம்** - ஆயிரத்து எட்டு அண்டங்களையும் நான் கண்டேன். அந்த அண்டங்களுக்கு உள்ளே நீ நின்றதையும் கண்டேன். (இறைவனை முன்னிலைப் படுத்திக் கூறுவது) இப்பெரிய உலகில் உனது தாண்டவங்கள் நூற்றியெட்டையும் பார்த்தேன்; அதனால் என் மனத்தில் எழுந்த ஐயங்கள் அனைத்தும் தீர்ந்தன.

*அந்தக் கரணம் எனச்சொன்னால் ஆட்டையும்*
*அஞ்ஞானம் என்னும் அடர்ந்தவன் காட்டையும்*
*சந்தத் தவம்என்னும் வாளினால் வெட்டினேன்*
*சாவாது இருந்திடக் கோட்டையும் கட்டினேன்* 21

**விளக்கம்** - அந்தக் கரணம் என்பது மனமாகிய உட்கருவி என்பதாகும். அதனை ஆடு என்கின்றார் இடைக்காடர். இவர் இடையர் ஆதலால் மனத்தை ஆடு என்று கூறுகிறார். ஆடு அங்குமிங்கும் சென்று மேயும் இயல்புடையது. அது போலவே மனமும் அங்கும் இங்குமாக அலையும். மனம் செல்லும் இடம் அஞ்ஞானம் என்னும் வலிய காடு. அவற்றை அழகிய தவம் என்கின்ற வாளினால் வெட்டினேன். இறப்பின்றி இருக்கக் கோட்டை கட்டினேன். அதாவது அலைபாயும் மனத்தைத் தவம் செய்து அடக்க வேண்டும் என்பது உட்கருத்து.

*மெய்வாய்கண் மூக்குச் செவியெனும் ஐந்(து) ஆட்டை*
*வீறும் சுவைஒளி ஊ(று) ஓசை யாம்காட்டை*

*எய்யாமல் ஓட்டினேன் வாட்டினேன் ஆட்டினேன்*
*ஏக வெளிக்(கு) உள்ளே யோக வெளிக்(கு) உள்ளே* 22

விளக்கம் - மெய் வாய் கண் மூக்கு செவி என்று சொல்லக் கூடிய ஐந்து ஆட்டையும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் காட்டினுள் தளராமல் ஓட்டினேன். அவற்றை வருந்தச் செய்தேன். ஒரே வெளியாக இருக்கின்ற காட்டிற்குள் மனந்தளராமல் யோகம் என்ற வெளிக்குள் ஓட்டினேன்...

*பற்(று) இரண் டும்அறப் பண்(பு) உற்றேன் நண்(பு) உற்றேன்*
*பாலையும் உட்கொண்டேன் மேலையாம் கண்கண்டேன்*
*சிற்றின்பம் நீக்கினேன் மற்(று) இன்பம் நோக்கினேன்*
*சிற்பரம் சேர்ந்திட்டேன் தற்பரம் சார்ந்திட்டேன்* 23

விளக்கம் - அகப்பற்று புறப்பற்று என்ற இரண்டும் முழுமையாய் நீங்கிட நற்பண்பாகிய ஞானத்தை அடைந்தேன். அதனால் ஆஞ்ஞை என்கின்ற மெல் நிலையை அடைந்தேன். சிற்றின்பத்தை நிக்கினேன். பேரின்பத்தை எண்ணிப் பரம்பொருளிடம் சேர்ந்தேன். சிவமாக ஆனேன்.

*அண்ணாக்கை ஊடே அடைத்தே அமு(து) உண்ணேன்*
*அந்தரத் தரத்தை அப்பொழுதே எண்ணேன்*
*விண்ஆளும் மொழியை மேவிப்பூ சைபண்ணேன்*
*மெய்ஞ்ஞானம் ஒன்(று)அன்றி வே(று)ஒன்றை நண்ணேன்* 24

விளக்கம் - வாசியோக முறையால் உள் நாக்கை அடைத்து மூலாதாரம் என்கின்ற அமுதை உண்ணேன். ஆஞ்ஞை என்னும் மேல் நிலையை அடைய அப்பொழுது நினைக்கவில்லை. விண்ணையும் ஆள்கின்ற மொழியைக் கொண்டு வழிபாடு செய்யேன். உண்மை அறிவு ஒன்றைத் தவிர வேறு ஒன்றையும் நினைக்கவில்லை.

*மண்ஆதி பூதங்கள் அனைத்தையும் கண்டேனே*
*மாய விகாரங்கள் யாவையும் விண்டேனே*
*விண்ஒளி மொழியை மெய்யின்உள் கொண்டேனே*
*மேதினி வாழ்வினை மேலாக வேண்டேனே* 25

விளக்கம் - மண் நீர் வான் காற்று நெருப்பு ஆகிய பூதங்கள்

ஐந்தையும் கண்டேன். மாயை என்னும் விகாரத் தன்மையை விட்டொழித்தேன். வானத்தில் ஒளிவடிவாய் விளங்கும் இறையை உள்ளத்தில் வைத்தேன். உலக வாழ்வை மேலானதென்று விரும்பேன்.

*வாக்(கு)ஆதி ஐந்தையும் வாகாய்த் தெரிந்தேனே*
*மாயைசம் பந்தங்கள் ஐந்தும் பிரிந்தேனே*
*நோக்கரு நோக்கங்கள் ஐந்தும் புரிந்தேனே*
*நுவலும்மற்ற ஐந்(து)யோக நோக்கம் புரிந்தேனே* 26

**விளக்கம்** - ஓசை(வாக்கு) ஊறு ஒளி நாற்றம் சுவை முதலான ஐந்தையும் பற்றி அவற்றின் தன்மை பற்றி அறிந்து கொண்டேன். மாயை தொடர்பான ஐந்தையும் (மெய், வாய், கண், மூக்கு, செவி) விலக்கினேன். நோக்கங்கள் ஐந்தையும் புரிந்து கொண்டேன். செவ்வாய் புதன் குரு சுக்கிரன் சனி என்ற ஐந்து கோள்களால் உண்டான யோகங்களையும் புரிந்து கொண்டேன்.

*ஆ(று)ஆ தாரத்தெய் வங்களை நாடு*
*அவர்க்கும் மேலான ஆதியைத் தேடு*
*கூ(று)ஆன வட்டஆ தனத்தில் கூடு*
*கோசம் ஐந்தும்கண்டு குன்(று)ஏறி ஆடு* 27

**விளக்கம்** – மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆஞ்ஞை என்ற ஆறு ஆதாரங்களுக்கு உரிய தெய்வங்கள் முறையே விநாயகர் நான்முகன் திருமால் உருத்திரன் மகேசுவரன் சதாசிவன் என்பன. இவற்றை நாடுக. ஆனால் அதை விட முழுமுதற் கடவுளைத் தேடு. அதனால் தோனறும் பேரின்பத்தில் கூடு. அன்னமய கோசம் பிராணமய கோசம் மனோமய கோசம் விஞ்ஞாகமய கோசம் ஆனந்தமய கோசம் என்ற ஐந்து கோசங்களாகிய குன்றின் மேல் ஏறி ஆடு.

**நாராயணக் கோனார் கூற்று**

இடைக்காடர் யாதவர் குலத்தவர் ஆதலின் பசுவை நோக்கிச் சொல்வதாக மேலும் நாராயணக் கோனார் என்பவர் கூறுவதாகப் பாடியுள்ளார். இக்கண்ணிகளின் உட்கருத்து எதனையும் நினையாமல் பரம்பொருள் ஒன்றையே நினை என்பதாகும். பசு என்ற சொல் உயிரையும் குறிக்கும். ஆதலால் உயிரை நோக்கிக் கூறுவதாகவும் கொள்ளலாம்.

*ஆதி பகவனையே பசுவே! அன்பாய் நினைப்பாயேல்*
*சோதி பரகதிதான் பசுவே! சொந்தம்அது ஆகாதோ?* 28

**விளக்கம்** - பசுவே! முழுமுதற் கடவுளை நினை. அப்படி நினைப்பாயேல் ஒளி வடிவமான பரம்பொருள் உனக்குச் சொந்தமாய் ஆகாதோ? (ஆகும் என்பது கருத்து)

*எங்கும் நிறைபொருளைப் பசுவே! எண்ணிப் பணிவாயேல்*
*தங்கும் பரகதியில் பசுவே! சந்ததம் சாருவையே* 29

**விளக்கம்** - பசுவே! அங்கு இங்கு என்னாதபடி எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளை நினைத்துப் பணிவாயேல் மேலான கதியைத் தினந்தோறும் அடைவாய்.

*அல்லும் பகலும்நிதம் பசுவே! ஆதி பதம்தேடில்*
*புல்லும் மோட்சநிலை பசுவே! பூரணம் காண்பாயே*30

**விளக்கம்** - பசுவே! இரவும் பகலும் முழுமுதற் கடவுளின் பாதங்களைத் தேடித் தழுவினால் உனக்கு மோட்சம் என்கின்ற முத்தி நிலை முழுமையாய்க் கிடைக்காதோ? கிடைக்கும் என்பது கருத்து.

*ஒன்றைப் பிடித்தார்க்கே பசுவே! உண்மை வசப்படுமே*
*நின்ற நிலைதனிலே பசுவே! நேர்மை அறிவாயே* 31

**விளக்கம்** - பசுவே! ஒன்றாகிய பரம்பொருளைப் பற்றினால் உண்மையில் அது நமக்கு வசமாகும். நிலையாக நேர்மையாக நீ நின்றால் அதனை அறியலாம்.

*எல்லாம் இருந்தாலும் பசுவே! ஈசர் அருள் இலையேல்*
*இல்லாத் தன்மைஎன்றே பசுவே எண்ணிப் பணிவாயே* 32

**விளக்கம்** - பசுவே! எல்லாம் இருந்தாலும் பரம்பொருளின் அருள் இல்லையேல் இருந்தும் இல்லாத தன்மை என்று எண்ணிப் பணிக!

*தேவன் உதவிஇன்றிப் பசுவே! தேர்ந்திடின் வேறுஒன்று இல்லை*
*ஆவிக்கும் ஆவிஅதுஆம் பசுவே! அத்தன் திருவடியே* 33

**விளக்கம்** - பசுவே! உனக்குப் பரம்பொருளாகிய தேவனின் உதவி இன்றேல் வேறு ஒன்றால் உதவி பெற இயலாது. அத்தகைய அவனுடைய திருவடியே உனக்கு உயிராகும்.

*தாயினும் அன்பன் அன்றோ பசுவே! சத்திக்குள் ஆனவன்தான்*
*நேயம் உடையவர்பால் பசுவே! நீங்காது இருப்பானே* 34

**விளக்கம்** - பசுவே! தாயைக் காட்டிலும் மேலான அன்புடையவன் அவனே. சத்திக்குள் அவன் அடங்கியவனே. எவர் அன்புடையவரோ அவர்பால் அவன் அவரை விட்டு நீங்காதிருப்பான்.

*முத்திக்கு வித்துஆனோன் பசுவே! மூலப் பொருள் ஆனோன்*
*சத்திக்கு உறவுஆனோன் பசுவே! தன்னைத் துதிப்பாயே* 35

**விளக்கம்** - பசுவே! வீடுபேறு அடைவோர்க்கு அவனே மூலமாவான். சத்திக்கு உரிய சொந்தம் அவனே. அவனை நீ வணங்குக.

*ஐயன் திருப்பாதம் பசுவே! அன்புஉற்று நீபணிந்தால்*
*வெய்ய வினைகள் எல்லாம் பசுவே! விட்டுஓடும் கண்டாயே* 36

**விளக்கம்** - பசுவே! ஐயனின் அழகிய திருவடிமேல் அன்பு கொண்டு நீ வணங்கினால் வெம்மைதரும் தீ வினைகள் யாவும் உன்னை விட்டு ஓடும் என்பதைக் கண்டாய் அல்லவா?

*சந்திர சேகரன்தாள் பசுவே! தாழ்ந்து பணிவாயேல்*
*இந்திரன் மால்முதலோர் பசுவே! ஏவல் புரிவாரே* 37

**விளக்கம்** - பசுவே! சந்திரனைத் தலையில் தரித்த சந்திரசேகரன் ஆகிய சிவனுடைய திருவடிகளை நீ வணங்கினால் இந்திரன் திருமால் முதலான தேவர்கள் உனக்கு ஏவல் புரிவர்.

*கட்புலன் காணஒண்ணா பசுவே! கர்த்தன் அடிஇணையை*
*உட்புலன் கொண்டுஏத்திப் பசுவே! உன்னதம் ஏய்வாயே* 38

**விளக்கம்** - பசுவே! கண்ணால் காண இயலாத கடவுளின் இணையடிகளை உள்ளத்திலே நினைந்து போற்றினால் நீ மேன்மை அடைவாய்.

*கட்டியும் காணஒண்ணாப் பசுவே! கர்த்தன் அடிஇணையை*
*ஒட்டிப் பிடிப்பாயேல் பசுவே! உன்னை நினைப்பவர்யார்?* 39

**விளக்கம்** - பசுவே! கட்டிப் பிடித்தாலும் காண இயலாத கடவுளின் அடியிணையை நீ அவனை ஒட்டிப் பிடிப்பின் உன்னைப் பற்றி எண்ணுபவர் யார்? அவர்களால் உன் பெருமையை அளவிட இயலாது.

*தன்மனம் தன்னாலே பசுவே! தாணுவைச் சாராதார்*
*வன்மரம் ஒப்பாகப் பசுவே! வையத்துள் உறைவாரே* 40

**விளக்கம்** - பசுவே! தன் மனத்தினாலும் தாணு என்ற பெயருடைய இறைவனைச் சாராதார் வலிய மரத்துக்கு ஒப்பாவர். அவர்களும் உலகிலே வாழ்கின்றார்கள்.

*சொல்என்னும் தற்பொருளாம் பசுவே! சோதியைப் போற்றாக்கால்*
*இல்என்று முத்திநிலை பசுவே! எப்பொருளும் சொலுமே* 41

**விளக்கம்** - பசுவே! சொல்லாலே ஒளி வடிவான இறையைப் போற்றாத பொழுது முத்தி நிலை இல்லை என்று எப்பொருளும் சொல்லுமே!

**நெஞ்சொடு கிளத்தல் :**

*கண்ணுள் மணியைக் கருதிய பேரொளியை*
*விண்ணின் மணியை விளக்(கு) ஒளியைப் போற்றீரே* 42

**விளக்கம்** - கண்ணுக்குள் இருக்கும் கண்மணி போல் எண்ணிய பேரொளி வடிவான இறையை வானிலே தோன்றும் மணிபோன்ற இறையை விளக்கின் ஒளிபோல் விளங்குபவரைப் போற்றுவீராக!

*மனம்வாக்குக் காயம் எனும் வாய்த்தபொறிக்(கு) எட்டாத*
*தினகரனை நெஞ்சமதில் சேவித்துப் போற்றீரே.* 43

**விளக்கம்** - மனம் வாக்கு காயம் (உடல்) என்ற மூன்றையும் கடந்த அதாவது அறிவுக்கு எட்டாத தினகரன் என்று பெயர் படைத்த இறையை நெஞ்சிலே வைத்துப் போற்றுவீராக!

*காலம்மூன் றும்கடந்த கதிர்உள்ளத்தால்*
*சாலம்அன்றிப் பற்றிப் சலிப்(பு) அறவே போற்றீரே* 44

**விளக்கம்** - நிகழ் காலம் இறந்த காலம் எதிர் காலம் என்ற மூன்று காலங்களையும் கடந்த ஒளியை மனத்தால் எவ்வித மாறுபட்ட எண்ணம் இன்றி வஞ்சனை இன்றிப் போற்றுவீர்.

*பாவில் சுவைபோலும் பழத்தில் மதுப் போலும்*
*நூவில் பொருள்போலும் நுண்பொருளைப் போற்றீரே* 45

**விளக்கம்** - பாலுக்குள் இருக்கும் சுவை போலவும் பழத்திலே

இருக்கும் மதுப் போலவும் அறிவுதரும் நூலுக்குள் இருக்கும் நுண்பொருள் போலவும் இருக்கும் பரம்பொருளைப் போற்றுவீராக!

*மூவர் முதலை முக்கனியைச் சர்க்கரையைத்*
*தேவர் பொருளைத் தெள்அமுதைப் போற்றீரே* 46

**விளக்கம்** – திருமுறை பாடிய சம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தர மூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவருக்கும் முதலாக இருப்பவனை பலா, மா, வாழை, ஆகிய முக்கனி போன்றவனைச் சர்க்கரை போன்று இனிமை உடையவனைத் தேவர்களுக்குச் சிறந்த பொருளானவனைத் தெளிந்த அமுது போன்றவனைப் போற்றுவீராக!

*தூய மறைப்பொருள்ச் சுகவாரிதி அமிழ்தை*
*நேயமுடன் ஆளும்நிலை பெறவே போற்றீரே* 47

**விளக்கம்** – தூய வேதங்களின் பொருளாய் இருப்பவனை, சுகக்கடலில் தோன்றிய அமிழ்தம் போன்றவனை நேசத்துடன் ஆளும் நிலைபெறப் போற்று வீராக!

*சராசரத்தைத் தந்த தனிவான மூலம் என்னும்*
*பராபரத்தைப் பற்றிப் பவம்அறவே போற்றீரே* 48

**விளக்கம்** – இந்த உலகங்களை உண்டாக்கித் தந்தவனை அனைத்திற்கும் மூலமாய் இருப்பவனை மேலான தன்மை படைத்தவனை நம்முடைய பிறப்பு நீங்கப் போற்றுவீராக!

*மண்ஆதி பூதம்முதல் வகுத்த(து) ஒரு வான்பொருளைக்*
*கண்ணாரக் காணக் கருத்(து) இசைந்து போற்றீரே* 49

**விளக்கம்** – மண் விண் நீர் நெருப்பு காற்று ஆகிய ஐம்பூதங்களையும் உண்டாக்கிய ஒரு உயர்ந்த பொருளான இறையைக் கண்ணாரக் காண்பதற்குக் கருத்து இசைந்து போற்றுவீராக!

*பொய்ப்பொருளை விட்டுப் புலம்அறிய ஒண்ணாத*
*மெய்ப்பொருளை நாளும் விருப்(பு) உற்றுப் போற்றீரே* 50

**விளக்கம்** – பொய்யான பொருள்களை விட்டு அறிவுக்கு எட்டாத மெய்ப்பொருளைத் தினமும் விருப்பத்துடன் போற்றுவீராக!

*எள்ளில் தைலம்போல் எங்கும் நிறைபொருளை*

*உள்ளில் துதித்தே உணர்(வு) அடைந்து போற்றீரே* 51

**விளக்கம்** - எள்ளில் எண்ணெய் இருப்பதுபோல் எங்கும் நிறைந்த பொருளான இறைவனை நினைத்து வணங்கி உணர்வு பெற்றுப் போற்றுவீராக!

*(தொடரும்...)*

## யார் இவர் - மாணிக்கவாசகர்

(வித்துவான் கொ.பூமிநாதன்)

**நுழையும் முன்..**

நமச்சிவாய வாழ்க என்ற மணிமந்திரத்தில் தொடங்கிய வாசகப் பெருமான் சிவாயநம எனப் பெற்றேன் என்கிறார். ஆனாலும்

*உடையாள் உன்றன் நடுவிருக்கும்*
*சிவ சிவ*
*உடையாள் நடுவுள் நீயிருத்தி*
*சிவ சிவ*
*அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதனால்*
*சிவயசிவ*

இம்மந்திரத்தை மறைத்துக் கூறுகிறார்.

### திருவாசகம் முத்தி தருபனுவல்

*வாக்கு உன்மணி வார்த்தைக்கு ஆக்கி*
*மாசில் மணியின் மணிவார்த்தை பேசி*
*திருவாசகம், மணியாகிய சிவனின் (சிவம் ஒளி) வார்த்தை*
*மணியான ஒளி வார்த்தை.*

*உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின்*
*வாக்கினிலே ஒளி உண்டாகும் (பாரதி)*
*ஒளிர் வாசகம் - மணிவாசகம்*
*மணி - ஒளி - விந்து*
*வார்த்தை - ஒலி - நாதம்*

நாதவிந்து என்பதே மணிவாசகம்; மணிவாசகர் ஆயிற்று என உணரலாம்.பெற்றவர் யார்? தெரியாது; தாயுமிலி, தந்தையிலி பெற்றவர் இருந்தால் தானே பெயர் வைக்க. இறைவனின்

வாகனமான நந்தி எம்பெருமான் மாணிக்கவாசகராக உயிர்கள் நல்ல நிலை அடையும் பொருட்டு அவதரித்தார். நந்தியே சிவன் தானே.

இம்முறையில் பார்த்தால், ஆவுடையார் கோவிலாகிய திருப்பெருந்துறையில் நந்தி கிடையாது; இறைவனுக்கு இலிங்க வடிவம் கிடையாது; திருவிழா நாயகன் மாணிக்கவாசகர் பெருமானே! முதல் ஒளி வழிபாடு மாணிக்கவாசகருக்கே. பரமுத்தி பெற்றவர் எப்படி இறைவனின்றி உடம்பெடுக்க முடியும்.

அதனால், யோனிப் பிறப்பின்றி, திருப்பெருந்துறையில் தோன்றி, பவுத்தம் தலைதூக்கியிருந்த (களப்பிரர் கலப்பால்) கடவுள் மறுப்புக் கொள்கை பாண்டிய மன்னன் மூலம் அருட்பெருஞ் செயல்களை இறைவன் நிலைநாட்டினார். பாண்டிய மன்னன் அறிவீனத்தால் மாணிக்கவாசகர்க்குக் கொடுத்த தண்டனையை அனுபவித்தவர் இறைவனே.

**திருவாதவூர் :**

பாண்டியைத் திருத்த வந்த பெருமான் முதன்மை அமைச்சராகிறார். அவருக்கு உரிய அரண்மனை ஏவலர் காவலர் வாழ் இடத்திற்கு அவர் வைத்த பெயர் திருவாதவூர்.

வாதம் - காற்று; ஊர்தல் - மேலேறுதல்; மேலேறும் காற்று - பிராணன்; கீழ் இறங்கும் காற்று - அபாணன்; கீழ் இறங்கும் காற்றால் இவ்வுலக வாழ்க்கை நடைபெறுகிறது.

**பிள்ளைப் பேறு - குழந்தை பிறத்தல்**

குழந்தை பிறக்கும் உயிரணு கீழே இறக்கம். மலம், சிறுநீர் கழித்தல், உண்ணும் உணவு, நீர் கீழிறங்கல், முதலியவை அபாணன் செயல்.

பிராணனை மேலேற்றி ஆக்ஞை சென்று அங்கிருந்து ஊசி முனைத் துளை வழியாகிய மகாமேருவாகிய உச்சி - வான் அடைந்தால் பிறவியில்லை.

ஆகவே **திருவாதவூரார்** என்றழைக்கப்பட்டார்.

இதைத் தம் ஞானத்தாழிசையில் திருக்கடைக் காப்பாகப் பெருமானே கூறுகிறார்.

உருவானது விந்தின் பெயர், குருவானது ஞானம்
உடலுக்குயிர் ஈறாறில் ஒருநான்கனுள் முதலும்
குருவானது முனைமீதினில் அணுவாகிய வெளியில்
குடியாகிய பதிகண்டவர் அருள்வாத வூரரே;
ஒருவாசகம் திருவாசகம்; புவிமீதில் மகிழ்ந்தே
உரைசெய்தனர் தமிழ்த்தாழிசை நெறியின்படி நின்றோர்
கருவாசலில் அணுகாமலே பிறவாநெறி பெறுவர்
கடவுள்செயல் அறியாதவர் கருவாசலில் புகுவார்.

**திருவாசகம் - இறைவன்**

சிவன் ஒளி வடிவானவன்; பெருஞ்சோதி; அருட்பெருஞ்சோதி; அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய் இருப்பவன்; அவரின் சில தொடர்கள்.

சோதியே சுடரே சூழ்ஒளி விளக்கே அருளுடைச் சுடரே
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே கடுந்தழல் பிழம்பன்ன மேனி
கதிரை மறைத்தன்ன சோதி தீ என்னுள் எழு பரஞ்சோதி

இவ்வாறு பலப்பல பாடல்களில் இறைவனைக் காட்டுகிறார். நாமும் காண முடியும். மாலயனும் அடிமுடி தேடியபோது பேரொளிப் பிழம்பாகத் தானே நின்றார்.

**திருவாசகம் - ஆன்மா**

போற்றி திருஅகவலில் உலகப் படைப்பை விளக்குகிறார். உயிர்கள் பிறப்பையும், கருப்பை நீரில் பத்துத் திங்கள் புரளும் குழந்தை - இதுவே பிறவிக்கடல்; படும்பாடும், பிறந்த பின் படும் பாடும், வாழ்வதே போராட்டமாக வருணிக்கிறார்.

இவற்றில் இருந்து இறையடி சேர வழி கூறுவதே திருவாசகம்.

**வழி**

இந்திரிய வய மயங்கி இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்து போய் அருநரகில் வாழ்வேற்கு...
காமப் பெருங்கடலுள் புகுந்து அழுந்தி பிறவிக் கடலாகிய கருப்பைக் கடல் கடப்பது எவ்வாறு?

**காமம் விடுக**

கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே...

இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்தோட என்கிறார்.

**பைத்தியக்கார உலகம்**

வைத்த நிதி காக்க பித்து;
பெண்டிர்க்கா அலையும் பித்து;
பெற்ற பிள்ளைகளுக்காகப் பித்து;
சாதிப் பித்து; கல்வி கற்க கற்பிக்கப் பித்து;
இந்தச் சித்த விகாரக் கலக்கம்; பிறவி ஆக்கும்; நீங்குவது எப்போது?
விடை கூறுகிறார்.

வைத்த நிதி பெண்டிர் மக்கள் குலம் கல்வி என்னும்
பித்த உலகில் பிறப்போடு இறப்பென்னும்
சித்த விகாரக் கலக்கம் தெளிவித்த
வித்தகத் தேவன்...
சந்தைக் கூட்டம் போன்ற சுற்றம், பற்று நீங்குவது வேண்டுமே.
இணையார் திருவடி என்தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்
உரைமாண்ட உள்ளொளி உத்தமன் வந்தென் உளம்புகலும்

**திருவாசகம் - தன் வரலாறு**

அன்னையையும் அத்தனையும் நீத்து,
அகலிடத்தார் ஆசாரம் விட்டு,
தன்னை மறந்து தலைவணங்கத் தலைப்பட்டு,
பிரிந்திருக்கும் ஆற்றாத ஏக்கம்; அவனைச் சேர நோக்கம்;
இதுவே திருவாசக வாக்கு.
ஆட்கொண்ட அடிப்படையே குதிரை வாங்கச் சென்றமைதான்.

**நரி - பரி**

ஆட்கொண்டவன் தன்னை மறந்தார்; தலைப்பட்டார்; காதலால் கசிய மறத்தல், மயக்கமாகிப் பிச்சேறிய நிலையில் பெருந்துறையில் இருந்தார்.

தலைமை அமைச்சர் பரிவாரங்களோடு செல்லும் போது பொன்னையும், பொருளையும் தாமேயா சுமந்து செல்வார்.!

இவர் ஆட்பட்டுப் பிச்சேறிய நிலையில் ஒரே சித்தமாய் இருந்தது கண்ட பணியாளர்கள் மதுரைக்குப் பயணமானார்கள். பாதி வழியில்

பழியை அவரிடம் சுமத்திப் பணத்தைப் பங்கிட்டுக் கொண்டனர்.

இதைப் பாண்டியனுக்கு உணர்த்தவே, எத்தனையோ விலங்குகள் இருக்க, நரிகளைக் குதிரையாக்கினார். நரித் தந்திரம், நயவஞ்சகம் பாண்டியனுக்குத் தான் புரியவில்லை.

**சிவன் செயல்**

தன் அடியார்கள் கேட்டதைக் கொடுப்பவன்; கொடுத்தவன். கோளாமலேயும் கொடுத்தவன். வாசகப்பெருமானோ எதையும் கேட்கவில்லை - ஒன்றைத் தவிர.

வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருக என்று அருள்புரியா யே
எத்தனையானும் யான் தொடர்ந்துன்னை
இனிப் பிரிந்தாற் றேனே

இறைவன் ஆட்கொண்டார்; அதை அதிசயப்பத்தில் வியக்கிறார். இறைவனோடு அத்துவிதமாய் (மகா ஆனாயம்) வான் கலந்தார்; மாணிக்கவாசகர்க்காகத் தாமே கூலியாளாய் வந்தார்; பிட்டுக்கு மண் சுமந்தார்.

மாணிக்கவாசகர்க்கு மன்னன் தந்த தண்டனைக்கு மாமணி இறைவனே அனுபவித்தார். இருந்தும்.

பரகதி பாண்டியர்க்கு அருளினான் இறைவன்.

**நாய்**

நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை,
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்கு

நாயாய்த் தம்மை 60 இடங்களில் குறிக்கிறார். பட்டினத்தடிகளும் தம்மை நாய் என்று பல இடங்களில் குறிக்கிறார்.

அப்படி நாய் என்று கேவலமாகக் கூறக் காரணம் என்ன?

1. நாய் கூடி வாழாது - கேவல நிலை.
2. உண்டதைக் கக்கும்; அதையே உடனே உண்ணும். பிறந்த இடத்தையே நாடும் செயல்.
3. எப்போதும் நாக்கைத் தொங்கப் போட்டு மூச்சை வீணாக்கும். இறந்து இறந்து பிறக்கும்.
4. முற்பிறப்பு நினைவு வந்தாலும் அதை உடனே மறந்து விடும்.

5. நன்றி கெட்டது; வளர்ப்பவன் உணவு கொடுக்காவிடில் அவனையே கடித்துக் கொன்று விடும். (இறைவனையே மறக்கும் நிலை)

**பெருமான் நமக்காகக் கூறியது**

மாணிக்கவாசகப் பெருமான் தன் வரலாறாகத் தம் பிறவா நிலைக்கு ஏங்கி, பிரிந்த நிலைக்கு மிக ஏங்கிப் பாடியவையே திருவாசகம்.

***ஆனால்,***

நமக்காக, பிறவியெடுத்த, பேராசையாம் இந்தப் பிண்டமற விழிப்புக்கொள்ளச் செய்கிறார்.

முன்னை வினை இரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் தென்னன்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரம் தீர்க்கும் மருந்து

இந்த மருந்தாகிய அமிழ்தை அடைய முந்துங்கள் என்று நம்மை அழைத்து, முன்னிலைப்படுத்திக் கூறுகிறார்.

பெருமான் பேரானந்தத்து பிரியா திருக்கப் பெற்றீர்கள்!
அருமால் உற்று, பின்னை நீர் அம்மா அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் மணிக்கதவம் திறந்த போதே சிவபுரத்துத்
திருமால் அறியாத் திருப்புயங்கன் திருத்தாள் சென்று சேர்வோமே

**அறிவுரை :**

போவோம் காலம் வந்தது காண்...
இன்னும் நீர் நெடுநாள் இப்பூமியில் வாழ்வோம் என்று நினையாதீர்!
அதற்காக...
விடுமின் வெகுளி; வேட்கை நோய்
மிக ஓர் காலம் இனி இல்லை ...
அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள்
அணி ஆர் கதவம் அடையாமே
புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கள் தாளே புந்தி வைத்திட்டு
இகழ்மின் எல்லா அல்லலையும்
இனி ஓர் இடையூறு அடையாமே
பாருருவாய பிறப்பற வேண்டும்

பத்திமையும் பெற வேண்டும்

ஆகவே,

பிறப்பறுப்பாய் எம்பெருமானே என்று வேண்டுவோம்.

**பெருமை**

வேதமும் பலமுறை ஓதினாலும் உருகி வழியாத கண்ணீர் ஒரு முறை திருவாசகம் ஓதினால் கண்ணீர் பெருகி ஓடும் என்பதற்கு இத்திலிப் பேரறிஞர் ஜி.யு.போப் அவர்களே சாட்சி.

**காலம்**

காலம், கி.பி. 3 என கா.சு.பிள்ளை ஆய்ந்திருக்க கி.மு.3 என ஆய்ந்திருக்கிறார்கள். காலம் கடந்த இறைவனின் நந்தியே வாசகராய்த் தோன்றினார் என்றால் காலம் கணிக்க முடியுமா?

கடவுள் இல்லை எனப் புத்தர் சமணர்கள் அழிக்கவும் முனைந்த நிலையில் அவர்கள் கொள்கை தவறென உணர்த்தி ஒப்புக் கொள்ள வைத்தவர்களுள் பிள்ளைப் பெருமான், அப்பர் பெருமான் ஆகியோரும் செய்த சிவத் தொண்டு போற்றுவோம். சிவன் சேவடி சேர்வோம்.

## அதிமதுர கவிகள் *(தொடர்ச்சி)*

காப்பியக்கவிஞர் நா. மீனவன்

**அன்னம் இறங்காமல் அலையக் காரணம்**

மதுரையில் சித்திரைத் திருவிழா நிகழ்ந்த காலையில் மீனாட்சி அன்ன வாகனத்தில் திருவுலா வந்த காட்சி கண்ட காளமேகம் அதற்கான காரணத்தைக் கற்பனையாக நகைச்சுவை தோன்றப் பாடிய வெண்பா.

*மாயனார் போற்றும் மதுராபுரிச் சொக்க*
*நாயனார் பித்(து) ஏறினார் என்றே – நேயமாம்*
*கன்னல்மொழி அங்கயற்கண் காரிகையார் ஐயையோ*
*அன்னம்இங் காமலை வாள்*

விளக்கம் – மாயவனான திருமால் போற்றும் சிறப்புடைய மதுராபுரியில் கோயில் கொண்டுள்ள சொக்கநாதர் பித்தம் பிடித்தவரானார் என்று எண்ணியே அவர்பால் அன்புடையவளான

கயல் போன்ற கண்ணுடையவளான மீனாட்சி அன்ன வாகனத்தை விட்டு இறங்காமல் (சோறு தொண்டையில் இறங்காமல்) வீதியில் பவனி வருகிறாள். இது இரங்கத் தக்கது.

**குதிரை விற்க வந்தவன்**

காளமேகம் மதுரையில் மீனாட்சி அம்மையை வழிபட்ட போது அருகில் இருந்த அன்பர் ஒருவர் அங்கிருந்த விநாயகரைப் பாடுமாறு கேட்க விநாயகர் குதிரைக்காரன் மகன் என்று நிந்தாஸ்துதியாகப் பாடிய வெண்பா.

*நல்லதொரு புதுமை நாட்டில்கண் டேன் அதனைச்*
*சொல்லவா சொல்லவா சொல்லவா – தொல்லை*
*மதுரைவிக்கி னேச்சுரனை மா(து) உமையாள் பெற்றாள்*
*குதிரைவிற்க வந்தவனைக் கூடி.*

விளக்கம் – மிகவும் அதிசயமான புதுமை ஒன்றை நாட்டிலே கண்டேன். அதனை உங்களுக்கு எடுத்துச் சொல்லவா? பழமையான மதுரையில் உள்ள விக்கினேசுவரனை உமையவள் குதிரை விற்க வந்தவனைக் கூடிப் பெற்றாள்.

**அக்காளை ஏறினார்**

சிவனின் வாகனம் காளை.. அதனைப் போற்றும் பொருட்டுப்பாட எண்ணியவர் இகழ்ச்சி தோன்றப் பாடினது. ஒரு புலவர் அக்காளை ஏறினார் என்று பாடுக என்றார். அதனால் பாடின காளமேகம் அதே இகழ்ச்சி தோன்றப் பாடின வெண்பா இது.

*கண்டீரோ பெண்காள் கடம்பவனத்(து) ஈசனார்*
*பெண்கள் தலைச்சுமந்த பித்(து) ஆனார் – எண்திசைக்கும்*
*மிக்கான தங்கைக்கு மேலே நெருப்பை இட்டார்*
*அக்காளை ஏறினாராம்*

விளக்கம் : கடம்பவனம் என்று அழைக்கப்படும் மதுரைவாழ் பெருமான் தலையில் கங்கை என்ற பெண்ணையும் தம் உடலின் இடப்பகுதியில் உமையவள் என்ற பெண்ணையும் சுமந்திருக்கும் பைத்தியக்காரன் என்ன செய்தான்? தெரியுமா? எட்டுத் திசைகளும் புகழ்கின்ற தம் கைக்கு மேலே நெருப்பை வைத்துள்ளார். அவர் புகழ் பெற்ற நந்தியெனும் காளை மாட்டின் மேல் ஏறியுள்ளதைப் பெண்களே! பார்த்தீர்களா?

**சிற்றிடைச்சி**

தில்லையிலே இருப்பவள் சிவகாமி. அவளைப் போற்ற எண்ணும் காள மேகம் நிந்தாஸ்துதியாக அவள் இடைச்சி என்று பாடுகிறார். அதாவது வஞ்சப் புகழ்ச்சியாகப் பாடுகின்றார்; அவள் மாட்டுக்காரக் கோனாரின் தங்கை. மேலும் ஆட்டுக் கோனாருக்கு மனைவியானாள். குட்டி மறிக்க ஒரு கோட்டானையும் பெற்றாள்.

***மாட்டுக்கோன் தங்கை மதுரைவிட்டுத் தில்லைநகர்***
***ஆட்டுக்கோ னுக்குப்பெண்(டு) ஆயினாள் - கேட்டிலையோ?***
***குட்டி மறிக்கஒரு கோட்டானையும் பெற்றாள்***
***கட்டிமணிச் சிற்றிடைச்சி காண்***

**விளக்கம்** - பெண்ணே! நீ கேட்கவில்லையோ? மாடு மேய்க்கும் இடையன் ஆகிய கோபாலனின் தங்கையான இப்பார்வதியை விட்டுத் தில்லையம் பதியில் நடமாடும் ஆட்டுக் கோனுக்கு (கூத்தப் பெருமான்) மனைவியானாள். இடையில் மேகலை அணிந்த அந்த அழகிய இடைச்சி ஆட்டுக் குட்டிகள் அங்கும் இங்கும் போகாமல் தடுக்க ஒரு கொம்புடைய கோட்டானையும் அதாவது ஒற்றைக் கொம்புடைய விநாயகனைப் பெற்றாள்.

இங்கே பார்வதியின் இடையைக் குறித்து இடைச்சி என்று குறிப்பிட்டார். குட்டி மறிக்க என்பது விநாயகரை வணங்கும் போது தலையில் குட்டிக் கொள்வதைக் குறித்தது. மாடுமேய்ப்பதால் கண்ணன் கோபாலன் எனப்பட்டான். சிவன் ஆடுவதால் ஆட்டுக்கோன் எனப்பட்டான்.

**கண்ணன் வேறா?** திருமாலே பரம்பொருள் சிவன் பரம்பொருள் அன்று என்று சிலர் கூறினர். இந்நிகழ்ச்சி மதுரையை அடுத்த அழகர் கோயிலில் நிகழ்ந்தது. அதனைக் கேட்ட காளமேகம் அவர் வேறா? இவர் வேறா? என்ற பொருள் படப் பாடிய பாடல்.

***கடம்பவனச் சொக்கருக்குக் கண்ணன்தான் வேறோ***
***இடம்பெரிய கண்ணன்ஒன்றை ஈந்தான் - உடம்பதனில்***
***செம்பாதி ஆனான் சுமக்க எருது ஆனான்***
***அம்பானான் தேவியும் ஆனான்***

**விளக்கம்** – கடம்பவனம் என்று அழைக்கப்படுகின்ற மதுரையில் கோயில் கொண்டிருக்கும் சொக்கநாதப் பெருமானுக்குக் கண்ணன் வேறான ஒருவனோ? ஒரு போதும் இல்லையே! விசாலமான தன்னுடைய ஒரு கண்ணையே முன்பு காணிக்கையாகக் கொடுத்தவன் அவனல்லவோ! அன்றியும் எம்பெருமான் திருமேனியில் சரிபாதியாக விளங்கும் அன்னையும் அவனாயிற்றே. அந்நாளில் சிவனைச் சுமக்கக் காளையாக வந்தவனும் அவனாயிற்றே. முன்னாளில் திரிபுரம் எரித்த காலத்தில் எய்தற்குரிய அம்பாக இருந்தவனும் அவனே. எம்பெருமான் தேவியும் அவன்தானே! சிவனுடைய சக்தியாகக் கொள்வது திருமால் என்பது அக்கால மரபு. திருமால் வேறன்று சிவனும் வேறன்று.

**புதுமை! புதுமை!**

மதுரை சென்ற காளமேகம் அன்னை மீனாட்சியை வணங்கச் சென்ற போது அவளைத் துதிக்கப் பாடிய சிலேடை அமைந்த பாடல்.

*விள்ளப் புதுமை ஒன்(று) உண்டால் வாயினின் மேவுதென்னம்*
*பிள்ளைக்(கு) ஒருதலை மூன்றே குரும்பை பிடித்ததிலே*
*கொள்ளிக் கண்திருட்டி யால்ஓர் குரும்பை குறைந்(து) அமிர்தம்*
*உள்ளில் பொதிந்த இரண்(டு) இளநீர்கச் சுறைந்ததுவே.*

**விளக்கம்** – (நேர் பொருள்) சொல்வதற்கு ஒரு புதுமை உண்டாம். ஆலவாயினிலே இருக்கும் தென்னம் பிள்ளையிடத்தே ஒரு குலையில் மூன்று குரும் பைகளே தோன்றின. கொள்ளிக்கண் பார்வையாலே ஒரு குரும்பை குறைந்து போனது. மற்ற இரண்டு குரும்பைகளும் அமுதம் நிறைந்து கைப்பு உடையதாயிற்று.

**அம்மையைக் குறித்த பொருள்** – ஆலவாயாம் மதுரை நகரிலே ஒரு புதுமை; தென்னன் ஆகிய மலையத்துவச பாண்டியனின் பிள்ளையாகத் தோன்றிய தடாதகைப் பிராட்டிக்கு ஒரு வரிசையில் மூன்று தனங்கள் தோன்றின. அவற்றுள் ஒன்று நெருப்புக் கண்ணுடைய சொக்கநாதன் பார்வையால் மறைந்து போனது. உயிர்களைக் காக்கும் அமுதம் நிறைந்த பிற இருதனங்களும் கச்சுக்குள் அடங்கின.

தடாதகைப் பிராட்டிக்கு மூன்று தனங்கள் தோன்றின. அவற்றுள்

ஒன்று சிவனின் நெற்றிக்கண் பார்வையால் மறைந்தது என்ற திருவிளையாடற் கருத்தைப் பாடிய பாடல் இதுவாகும்.

**பருந்து எடுத்துப் போகிறது**

காஞ்சி வரதராசப் பெருமாள் ஆலயத்தில் கருட உற்சவம் நடந்துகொண்டு இருந்தது. பெருமாள் கருட வாகனத்தில் வருவதைக் கண்ட காளமேகம் நகைச்சுவையாகப் பாடிய பாடல் இது.

*பெருமாளும் நல்ல பெருமாள் அவர்தம்*
*திருநாளும் நல்ல திருநாளாம் - பெருமாள்*
*இருந்திடத்தில் சும்மா இராமையினால் ஐயோ*
*பருந்(து) எடுத்துப் போகிறதே பார்.*

விளக்கம் - இந்தப் பெருமாளும் நல்ல பெருமாளே அவருடைய திருநாளும் நல்ல திருநாளே. இவர் இருந்த இடத்தில் சும்மா இராமையினால் ஐயோ! பருந்து எடுத்துக் கொண்டு போகின்றதே. இதனைப் பார். கருடன் மேலே அமர்ந்து பெருமாள் செல்லும் காட்சியைக் கண்ட காளமேகம் இவ்வாறு நையாண்டி செய்கின்றார்.

**கனவிலே வந்தான்**

காஞ்சி ஏகாம்பர நாதர்மேல் காதல் கொண்டாள் ஒரு பெண். அவரைக் கனவிலே கண்ட அவள் தன் தோழியரிடம் தான் கண்ட கனவைக் கூறி அவனைக் கண்டீரோ? பெண்களே ! என்று கேட்பதாகப் பின்வரும் பாடல் அமைந்துள்ளது.

*நேற்(று)இராவந்(து) ஒருவன் நித்திரையில் கைப்பிடித்தான்*
*வேற்(று)ஊரான் என்று விடாய்என்றேன் - ஆற்றியே*
*கஞ்சிகுடி என்றான் களித்தின்று போவென்றான்*
*வஞ்சியரே சென்றான் மறைந்து.*

விளக்கம் - வஞ்சிக்கொடி போன்ற பெண்களே ! நேற்று இரவு நான் துயில் கொண்டு இருந்த சமயம் ஒருவன் என் கையைப் பற்றினான். அவனை அயலூரான் என்று எண்ணி என் கையை விடு என்றேன். என் சினத்தைத் தணிக்க எண்ணிய அவன் தான் காஞ்சியிலே இருப்பவன் என்று சொன்னான். அவன் என் காதலனே என்றறிந்து என்னுடன் களித்திருந்து போ என்றேன். அப்பொழுது அவன் மறைந்து விட்டான். அவனை நீங்கள் பார்த்தீர்களா ?

கஞ்சியை ஆற்றிக் குடி என்றும் களி இருக்கிறது தின்று விட்டுப் போ என்ற பொருள் நயமாக அமைந்திருப்பதைக் காணலாம்.

**கருங்குயிலே :**

காஞ்சிக்குச் சென்ற காளமேகம் அன்னை காமாட்சியை வணங்கி நின்ற போது அவளைக் கருங்குயில்என்று கூறி அதற்கேற்பப் பாடிய கவிதை இது.

*காக்கைக்(கு) இரங்கும் குருகும் வளர்சக்ர வாகப்புள்ளும்*
*தாக்கச் சரபங் குழைந்த(து) எவ்வாறு சகதலத்தை*
*ஆக்கிப் பெருக்கித் திருவறச் சாலையில் அன்னமிட்டுக்*
*காக்கைக்(கு) ஒருகொக்கின் கீழே இருக்கும் கருங்குயிலே.*

**விளக்கம்** - நின் பெருமை பொருந்திய கைகளில் ஒலிக்கும் வளையல்களும் வளர்கின்ற சக்கரவாகப் பறவையினைப் போன்று விளங்கும் தனபாரங்களும் அழுத்தமாகத் தங்கிப் பொருந்தியவிடத்துச் சிங்கத்தைத் தாக்கி அழிக்கும் சிம்புள் பறவை வடிவு கொண்டசிவ பெருமானின் வலிய திருமேனி குழைந்து போயினவே. அது எவ்வாறு ? உலகைப் படைத்து வளம் பெருக்கி அழகிய அறச்சாலையிலே அனைவருக்கும் உணவளித்து உயிர்களைக் காக்கும் பொருட்டாக ஒப்பற்ற மாமரத்தின் கீழ் இருந்து தவமிருக்கும் கரிய நிறமும் குயிலின் இனிய குரலும் உடைய அம்மையே ! அதனை எனக்குச் சொல்வாயாக.

**எலி இழுத்துப் போகிறது !**

கணபதிக்குக் காஞ்சியிலே உற்சவம் நடந்து கொண்டிருந்தது. பெருச்சாளி வாகனத்தில் அமர்ந்து சென்ற காட்சியைக் கண்டார் காளமேகம். பாவம். இப்படிப் பிள்ளையை எலி இழுத்துப் போகிறதே சிவனுடைய மழு எங்கே? அவருடைய மாமனாகிய திருமாலின் சக்கரம் எங்கே ! நான்முகனின் தண்டம் எங்கே? அவர்கள் இதைத் தடுக்காமல் இருக்கின்றனரே அவை யாவும் பறி போயினவோ? என்று பாடிய பாடல் இது.

*மூப்பான் மழுவும் முராரிதிருச் சக்கரமும்*
*பார்ப்பான் கதையும் பறிபோச்சோ - மாப்பார்*
*வலிமிகுந்த மும்மதத்து வாரணத்தை ஐயோ*
*எலிஇழுத்துப் போகிற(து) என்?*

**விளக்கம்** - உலக முதல்வனாகிய சிவபெருமானின் மழுவாயுதமும் முரன் என்பவனை வென்று முராரி என்று பெயர் பெற்ற திருமாலின் சக்கரப் படையும் நான்முகனின் கதையும் பிள்ளையாரைக் காப்பாற்ற வழியின்றிப் பறி போயினவோ?

**ஆடாரோ அவர் ?**

திருவாரூரில் தியாகராசப் பெருமானின் திருநடனம் கண்டு வணங்கிய போது அரியதான இந்த நடனத்தைப் பெருமான் எவ்வாறு ஆடுகின்றார் ? என்று வியந்து போற்றிய போது அங்கிருந்த ஒருவர் ஏனய்யா அவர் ஆடமாட்டார்? என்று கேட்ட போது நிந்தாஸ் துதியாகப் பாடிய கவிதை

***ஆடாரோ பின்னை அவர் அன்பர்எலாம் பார்த்திருக்க***
***நீடாரூர் வீதியிலே நின்றுதாள் - தோடாரும்***
***மெய்க்கே பரிமளங்கள் வீசும் தியாகேசர்***
***கைக்கே பணம்இருந்தக் கால்***

**விளக்கம்** - காதில் உள்ள தோடுகளும் உடலிலே வீசும் வாசனைப் பொருள்களும் உடைய தியாகேசர் கையிலே பணம் இருந்தால் அவர் அன்பரெலாம் பார்த்திருக்க திருவாரூர் வீதியிலே நின்று ஆடமாட்டாரோ? அவரிடம் பணம் (பாம்பையும் குறிக்கும்) உள்ள போது ஆடமாட்டாரோ? என்பது குறிப்பு.

**ஆரூரானின் கழல்**

திருவாரூர் சென்ற காளமேகம் தியாகராசப் பெருமானின் திருநடனத்தைக் கண்டு மெய் மறந்து நின்றவர் பெருமானின் பாதத்திலே உள்ள சிலம்பினைப் பாடுகிறார்.

***பார்அளக்கும் தூதுசெல்லும் பைஅரவின் மேல்நடிக்கும்***
***சீர்அகலி சாபத்தைத் தீர்க்கும் - ஊர்அருகில்***
***சண்டச் சகடு(உ)தைக்கும் தையலாய் கார்நீல***
***கண்டத்(து)ஆ ரூரான் கழல்***

**விளக்கம்** - பெண்ணே ! கருநீல கண்டத்தை உடைய ஆரூரான் ஊர்ந்து செல்கின்ற ஆனேற்றின் (எருது) பாதங்கள் மாவலிக்காக அவன் தந்த உலகத்தை அளக்கும். பாண்டவர் பொருட்டுக் கௌரவர்பால் தூது செல்லும். படம் கொண்ட காளிங்கன் என்ற

பாம்பின் தலைமீது ஏறி நடிக்கும்; அழகிய அகலிகையின் சாபத்தைப் போக்கும். தன் ஊருக்குள் பலகை கொண்டு வந்த சகடாசூரனை உதைத்துக் கொல்லும்.

மாயவனாகிய திருமாலே எருதாய் வந்தான் என்பது புராணம். எனவே சிவனின் பாதங்கள் செய்ததாக இங்கே பாடுகிறார் காளமேகம்.

**வாயிற்படி ஆனார் இலையே**

திருவாரூர் தியாகராசப் பெருமான் சுந்தர மூர்த்தி சுவாமி களுக்காகப் பரவை நாச்சியார்பால் தூது சென்றார். அதனைப் போற்ற நினைத்தார் காளமேகம். சிவனின் அடிமுடி தேடிக் காணாத திருமாலும் நான்முகனும் அந்தப் பரவையார் வீட்டு வாயிற் படிகளாய் உருண்டு கிடந்திருந்தால் அவற்றைக் கண்டிருக்கலாமே அல்லவோ? என்று இரக்கம் தோன்றப் பாடுகின்றார்.

*ஆனார் இலையே அயனும் திருமாலும்*
*காணார் அடிமுடிமுன் காண்பதற்கு - மேனாள்*
*இரவுதிரு வாரூரில் எந்தைபிரான் சென்ற*
*பரவைதிரு வாயிற் படி.*

**விளக்கம்** - நான்முகனும் திருமாலும் முன்னாளில் சிவபெருமானின் அடியையும் முடியையும் காணாமற் போயினரே ! ஓர் இரவில் சுந்தரருக்காகப் பரவைபால் தூது சென்ற போது அவர் வீட்டு வாயிற்படிகளாக ஆகி இருந்தார்களே ஆனால் அடிமுடி கண்டிருக்கலாம் அல்லவா?

**கிழக் கொல்லன் :**

திருவாரூர்த் தியாகராசப் பெருமானைக் கண்ட போது அவரை வியந்து பாடியது.

*தென்ஒக்கும் சோலைக் கமலைப் பிரான்செஞ் சடாடவிதான்*
*என்ஒக்கும் என்னில் எரிஒக்கும் அந்த எரியில்இட்ட*
*பொன்ஒக்கும் கொன்றை கரிஒக்கும் வண்டுநற் பொற்பணிசெய்*
*மின்ஒக்கும் கங்கைகிழக் கொல்லன் ஒக்குமேல் வெண்பிறையே*

**விளக்கம்** - அழகுடைய வளமான சோலைகள் நிறைந்த திருவாரூரில் வீற்றிருக்கும் சிவபெருமானின் செஞ்சடைக்காடு எதனைப் போன்றதோ? என்று கேட்டால் அது எரியும் நெருப்பினைப்

போன்றதாகும் எனலாம். அச்சடையில் விளங்கும் கொன்றை மாலைகளோ நெருப்பில் இட்ட பொன்போல் விளங்கும். வண்டுகளோ கரித்துண்டுகள் போல் விளங்கும். அதன் மேலுள்ள கங்கையோ வயிரத் துண்டுகளை இணைத்துச் செய்த அணிகலன் போல் மின்னொளி பரப்பி விளங்கும். அதிலுள்ள வெண்பிறையோ பொன்னாபரணம் செய்யும் கிழக்கொல்லனைப் போல் விளங்கும். சிவனின் செஞ்சடை கொன்றை பிறைநிலா கங்கை ஆகியவற்றை இவ்வாறு உருவகப்படுத்துகிறார் கவிஞர்.

**சந்து(தூது) போனால் :**

திருவாரூர்ப் பெருமானை வணங்கச் சென்ற காளமேகத்தைப் பார்த்துப் பெருமான் ஏன்? இவ்வாறு ஆடுகிறார் என்று கேட்கக் கவிஞர் அவரை நோக்கி ஒரு பெண்ணிடத்தில் இருமுறையும் தூது போனார். அதற்காக நடந்த களைப்பால் கால் ஆடுகிறது என்று நகைச்சுவையாகப் பதிலளிக்கின்றார்.

*திருந்(து)ஆ(டு) அர(வு)அணியும் தன்கமலை ஈசர்*
*இருந்(து)ஆடா(து) என்செய் திடுவார் - பொருந்த*
*ஒருகாலே அல்லவே ஒண்தொடிக் காவன்*
*இருகாலும் சந்துபோ னால்.*

**விளக்கம் -** ஒளி பொருந்திய வளையணிந்த பரவையார்பால் சுந்தரரோடு மனம் பொருந்த ஒருதடவை அல்லாமல் அவ்விரவில் இருமுறையும் தூது சொல்ல நடந்ததால் நன்கு படம் எடுத்து ஆடும் பாம்பணிந்த அழகிய திருவாரூர்ப் பெருமான் ஆடாமல் என்ன செய்வார் ?

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### பெரியாரைத் துணைக் கோடல்

(அரசன் பேரறிவுடையவரைத் துணையாகக் கொள்ளுதல்)

**1. அறன்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை**
**திறன் அறிந்து தேர்ந்து கொளல்.**

அறன் அறிந்து - அறத்தினை அறிந்து; மூத்த அறிவுடையார் - சிறந்த அறிவுடையவர்களின்; கேண்மை - நட்பினை; திறன் அறிந்து -

அவர்தம் திறமையை அறிந்தும் நட்பின் தன்மையை அறிந்தும்; தேர்ந்துகொளல் – ஆராய்ந்து துணைக்கொள்ள வேண்டும்.

அரசியல் அறத்தினை அறிந்து ஓர் அரசன் சிறந்த அறிவுடையவர்களின் திறமையை அறிந்து நட்பின் தன்மையை அறிந்தும் அவர்தம் நட்பினை ஆராய்ந்து துணையாகக் கொள்ள வேண்டும்.

கொளல் – வியங்கோள் வினை முற்று

2. உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

உற்ற நோய் நீக்கி – வந்த துன்பங்களை நீக்கி; உறா அமை முற்காக்கும் – அத்தகைய துன்பங்கள் வராமல் அமை முன் அறிந்து காக்கும் ஆற்றல் மிக்க; பெற்றியார்ப் பேணிக் கொளல் – தன்மையுள்ளவரைத் தக்கன செய்து துணையாகக் கொள்ள வேண்டும்.

தனக்கு வந்த துன்பங்களை நீக்கியும் அத்தகைய துன்பங்கள் இனிவராமல் முன் அறிந்தும் காக்கும் ஆற்றல் மிக்க தன்மையுள்ளவரைத் தக்கன செய்து ஓர் அரசன் துணையாகக் கொள்ள வேண்டும்.

உறா அமை – இசைநிறை அளபெடை

நீக்கி – வினை எச்சம்

3. அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

அரியவற்றுள் எல்லாம் அரிதே – அரசனுக்கு அரியனவாகவுள்ள அனைத்திலும் அரிதானது; பெரியாரைப் பேணி – பெரியவர்களைக் காத்து; தமராக் கொளல் – தமக்குரியவராக நட்பாக்கிக் கொள்ளுதல்.

பெரியவர்களைக் காத்துத் தமக்குரியவராக நட்பாக்கிக் கொள்ளுதல் ஓர் அரசனுக்கு அரியனவாக உள்ள அனைத்திலும் கிடைத்தற்கு அரிதானதாகும்.

அரிதே – தேற்றேகாரம்

கொளல் – தொழிற் பெயர்

4. தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை.

தம்மின் பெரியார் – தம்மைவிடச் சிறந்தவர்களை; தமரா ஒழுகுதல் – தமக்குத் துணையானவராகக் கொண்டு ஒழுகுதல்; வன்மையுள் எல்லாம் தலை – தாம் கொண்ட வலிமைகளில் எல்லாம் தலை சிறந்த வலிமை ஆகும்.

தம்மைவிடச் சிறந்தவர்களைத் தமக்குத் துணையாகக் கொண்டு ஒழுகுதல் ஒரு மன்னன் தாம் கொண்டிருக்கும் வலிமைகளில் எல்லாம் தலைசிறந்த வலிமை ஆகும்.

தம்மின் – இன் உவம உருபு

தமரா – தமராக என்பதன் ஈற்றுக் குறை

ஒழுகுதல் – தொழிற்பெயர்

5. சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

சூழ்வார் கண்ணாக ஒழுகலான் – தன்னைச் சுற்றியுள்ளவரைக் கண்ணாகக் கொண்டு நடப்பதால்; மன்னவன் – மன்னன்; சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் – சுற்றியிருப் போரை ஆராய்ந்து துணையாகக் கொள்ள வேண்டும்.

தன்னைச் சுற்றியுள்ளவரைக் கண்ணாகக் கொண்டு மன்னன் நடப்பதால் சுற்றியிருப் போரை ஆராய்ந்து துணையாகக் கொள்ள வேண்டும்.

சூழ்ந்து – வினை எச்சம்.

6. தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்தது இல்.

தக்கார் இனத்தனாய் – தகுதியுடைய பெரியோரைத் தன் இனத்தனாய் – தகுதியுடைய பெரியோரைத் தன் துணையாகக் கொண்டவனாய்; தான் ஒழுக வல்லானை – தான் நடக்க வல்ல மன்னனை; செற்றார் – பகைவர்கள்; செயக் கிடந்தது இல் – செய்யும் தீங்கு இல்லை.

தகுதியுடைய பெரியோரைத் தன் துணையாகக் கொண்டவனாய் நடக்க வல்ல மன்னனுக்குப் பகைவர்கள் எந்தத் தீங்கும் செய்ய இயலாது.

**7. இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே**
**கெடுக்கும் தகைமை யவர்.**

இடிக்கும் துணையாரை – மன்னனிடத்தில் குற்றம் கண்டால் மன்னன் மனம் வருந்தச் சொல்லும் துணையான பெரியோரை; ஆள்வாரை – துணையாகக் கொண்டவரை; யாரே கெடுக்கும் தகைமை யவர் – யார் கெடுக்கும் தன்மை கொண்டவர்.

குற்றம் கண்டால் மன்னன் வருந்தும் படி எடுத்துச் சொல்லும் பெரியோரைத் துணையாகக் கண்டவரைக் கெடுக்கும் எண்ணம் கொண்டவர் யாருமில்லை.

இடிக்கும் – செய்யும் என்னும் எச்சம்
ஆள்வாரை – வினையால் அணையும் பெயர்
யாரே – தேற்றேகாரம்

**8. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பார் இலானும் கெடும்.**

இடிப்பாரை இல்லாத – மனம் வருந்த எடுத்துச் சொல்லும் பெரியோரைத் துணையாகக் கொண்டிராத; ஏமரா மன்னன் – பாதுகாப்பாற்ற மன்னன்; கெடுப்பார் இலானும் கெடும் – தன்னைக் கெடுப்பவர் இல்லை என்றாலும் தானே கெடுவான்.

தனக்கு எடுத்துச் சொல்லும் பெரியோரை இல்லாத பாதுகாப்பற்ற மன்னன், தன்னைக் கெடுப்பவர் இல்லை என்றாலும் தானே கெடுவான்.

**9. முதல் இலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம்**
**சார் இலார்க்கு இல்லை நிலை.**

முதல் இலார்க்கு – முதலீடு இல்லாதவர்க்கு; ஊதியம் இல்லை – அதனால் வரும் வருமானம் இல்லை; மதலையாம் – தாங்குதலாகிய; சார்பு இலார்க்கு – துணை இல்லாதவர்க்கு; இல்லை நிலை – நிலைத்த தன்மை இல்லை.

முதலீடு இல்லாதவர்க்கு அதனால் வரும் வருமானம் இல்லை;

அதுபோல, தன்னைத் தாங்குதலாகிய துணை இல்லாத மன்னனுக்கு நிலைத்த தன்மை இல்லை.

10. பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

பல்லார் பகை கொளலின் - பலருடைய பகைமையைக் கொள்ளுதலை விட; பத்தடுத்த தீமைத்தே - பத்து மடங்கு தீமையாகும்; நல்லார் தொடர் கைவிடல் - பெரியாரோடு நட்பினைக் கொள்ளாதிருத்தல்.

பெரியாரோடு நட்பினைக் கொள்ளாதிருத்தல் பலருடைய பகைமையைத் கொள்ளுதலை விடப் பத்து மடங்கு தீமையாகும்.

கைவிடல் - தொழிற் பெயர்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### தண்ணீர்ப் பந்தல் வைத்தது

ராஜேந்திர பாண்டியன் அரசாட்சி செய்துவந்த காலத்திலே காடுவெட்டிய காஞ்சிச்சோழன் எல்லாரும் அறியும்படி மதுரைக்குப் பலமுறை வந்து சொக்கநாதரைத் தரிசனம் செய்ய விரும்பினான். அதே நோக்கத் தோடு பாண்டியனை நேசம் கொள்ளும்பொருட்டு அவ்வப்பொழுது காணிக்கைப் பொருள்களை அனுப்பி வந்தான். சோழன் அனுப்பிய சுகர்ணாபரணம் பொன்னாடை முதலியவற்றைப் பாண்டியன் ஏற்று மகிழ்ந்தான். எதிர் சீராகப் பாண்டியன் பல சிறந்த காணிக்கைகளை அனுப்பி வைத்தான். சோழன் மிகவும் மனம் மகிழ்ந்தவனாகித் தனது குமாரியைப் பாண்டியனுக்குக் கொடுக்க முன் வந்தான்.

அந்த விவாகம் பற்றிய செய்தியை அறிந்தான் பாண்டிய மன்னனின் தம்பி ராஜசிம்மன். தம்பி பழிக்கும் பாவத்துக்கும் பயந்தவனல்ல. பெரும் வஞ்சனைக்காரன். தானே சோழ மன்னனின் மகளைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினான். இந்த எண்ணத்தோடு அவன் காஞ்சிபுரம் போய்ச் சேர்ந்தான். தன் நகருக்கு வந்து சேர்ந்த ராஜசிம்மனைச் சோழன் தனது பரிவாரங்களுடன் எதிர்கொண்டு வரவேற்றான். தவிரவும் அண்ணனுக்கு மணம் செய்விக்க நினைத்த தனது குமாரியைத் தன்னை நாடிவந்த தம்பிக்குக் கொடுத்து விட்டான்.

ராஜசிம்மன் தனது மருமகன் ஆனதும் சோழனின் சிந்தை திரிந்தது. பாண்டியனது ஆட்சியையே பிடுங்கித் தன் மருமகனுக்குக் கொடுத்துவிடக் கருதினான். ராஜேந்திர பாண்டிய மன்னனைப் பிடித்துத் தன் வசமாக்கும் எண்ணத்தோடு தனது மருமகனுடன் சதுரங்க சேனைகளையும் கூட்டிக்கொண்டு பாண்டியநாடு நோக்கிச் சென்றான். யுத்த பேரிகை முழங்கச் சேனைகள் சென்றன. மதுரைமா நகரத்திற்கு இரண்டு யோசனை அளவு தூரத்திலே நெருங்கி வந்துவிட்டான் சோழன். அந்தச் சேதியை ஒற்றர்கள் மூலம் தெரிந்தான் பாண்டியன். உடனே சோமசுந்தரக் கடவுளின் சன்னதிக்குச் சென்று முறையிட்டான். எம்பெருமானே ! அன்றொரு இரவு தேவரீரைத் தரிசிக்க வந்த அதே காடு வெட்டிய சோழன் இன்றும் வந்துள்ளான். உள்ளொன்று வைத்துப் புறமொன்று செய்கின்றவனாகிப் போர்க்கோலம் பூண்டு வந்திருக்கிறான். அன்று அவனது பக்திக்கு ஈடுசெய்த பெருமானாகிய தாங்களேதான் இப்போதும் அவனது பகைமைக்கும் ஈடுசெய்தருள வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டான். பெருமான் திருவருளாலே அசரீரி எழுந்தது. பாண்டியனே ! பயப்படாதே. உனக்கே வெற்றி உண்டாகும்படி யாம் செய்வோம் என்றது. அசரீரி கேட்ட அரசன் இறைவன் திருவடியில் விழுந்து ஆனந்தம் அடைந்தான். பின்னர் தன் அரண்மனை சேர்ந்தான்.

சூரியோதயத்துக்கு முன்பே எழுந்தான். சந்தியா வந்தனாதிகள் செய்து சிவபூஜை முடித்துக் கொண்டான். தனது சேனைகளைக் கூட்டிக்கொண்டு சோழனை எதிர்த்துப் போரிடச் சென்றான். பாண்டிய சேனை ஓர் ஆறுபோல இருந்தது; சோழ சேனை கடல்போல் இருந்தது. போர் தொடங்கியது; மிகவும் கடுமையாக நடந்துகொண்டிருந்தது. இடிமுழக்கம்போல ஒலியும் சண்டமாருதம் போன்ற வேகமும் உண்டாயின.

சோமசுந்தரப் பெருமான் திருவருளாலே பாண்டிய சேனா வீரன் ஒவ்வொருவனும் சோழ வீரர் கண்களுக்குப் பல பேர்களாகத் தோன்றினார்கள். தாக்குதல், எதிர் தாக்குதல், பிரயோகம், எதிர்ப்பிரயோகம் என்று போர்வெகு மும்முரமாக நடைபெற்றது. காலையிலே தொடங்கிய வெம்போர் நண்பகல் முடியக் கோரமாக நடை பெற்றுக் கொண்டிருந்தது. உச்சி வெயில் உக்கிரமாக எரித்ததால் வீரர்கள் அனைவரும் நீர் கிடைக்காமல் பெருந் தாகத்தால் பரிதவித்தனர்.

பாண்டியர் சேனை வாடி வருந்துவதைக் கண்ட சிவ பெருமான் அந்தச் சேனையின் நடுவாக நான்கு கால்கள் கொண்ட தண்ணீர்ப்பந்தல் ஒன்று அமைத்தார். பந்தலின் நடுவே விபூதி தரித்துத் தவக்கோலம் கொண்டுநீராளாக நின்றிருந்தார். பந்தலின் உள்ளே பெரும் பானைகளிலே ஆற்று நீர் நிரம்பியிருந்தது. ஒரு கமண்டலத்திலே நீரை முகந்து கொண்டு தன்னை நாடி வந்த வீரர் அனைவருக்கும் சலியாது நன்னீர் வார்த்தார் பக்தர்ப் பெருமான்.

விடாய் தீர்ந்த பாண்டிய வீரர்கள் புத்துணர்ச்சியும் பலமும் பெற்றவராகிச் சோழ சேனையைப் பன்மடங்கு உக்கிரத்தோடு எதிர்த்தனர். சோழர் சேனை சின்னா பின்னப் பட்டுச் சிதைந்தோடியது. வெற்றிவாகை சூடிய பாண்டிய சேனா வீரர்கள் காடுவெட்டிய சோழ வேந்தனையும் அவனது மருமகனாகிய ராஜசிம்மனையும் சிறைப்பிடித்தனர். அவர்கள் இருவரையும் ராஜேந்திர பாண்டியன் முன்பு கொண்டுவந்து நிறுத்தினர்.

பாண்டியன் தன்முன்னே சிறைப்பட்டு நின்ற சோழனையும் தன் தம்பியையும் கொண்டுபோய்ச் சோமசுந்தரப் பெருமானின் திருமுன் நிறுத்தி எம்பெருமானே ! தேவரீர் திருவுள்ளம் எதுவோ? என்று வணங்கி வேண்டினான். அதுகேட்ட பெருமானும், பாண்டிய ! நீ அறநெறி தெரிந்தவன் உன் இஷ்டப்படியே செய்யலாம் என்று அசரீரியாக மொழிந்தருளினார்.

அசரீரி வாக்கைத் தெய்வ வாக்கென்று உணர்ந்த பாண்டியன் தரும சாஸ்திரப்படி சோழனுக்குச் சிலதேர்கள், யானைகள், குதிரைகள், வீரர்கள் முதலியவற்றைக் கொடுத்துச் சில ஆபரணங்களையும் தந்து அனுப்பினான். தனது தம்பி ராஜசிம்மனுக்குத் தனது அரசிலே சிறிது பங்கு கொடுத்து அவனைத் தனியாக ஒதுக்கிவிட்டான்.

எல்லா உயிர்களையும் காப்பவனாகிக் கடவுள் அருளாலே பல்வளம் பெருக அரசு செய்து இனிதே வாழ்ந்திருந்தான் ராஜேந்திர பாண்டியன்.

---

25.05.2019 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்வில்

புலவர். கொ. பூமிநாதன்

வேனில் காதை பற்றிச் சொற்பொழிவாற்றினார்.

அன்று முற்பகல் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சி நடைபெற்றது.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் “திருநெல்லை”**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்